வாழ்வைப் பார்த்தோம்: (124ம் பக்கம் தொடர்ச்சி)

"மனித சமூகம் தனித்தனியே இயங்கிக் கொண்டு தன்னைவிடப் பரிபூரணத்துவம் வாய்ந்த மனிதக் கூறுகளைக் கொண்ட ஒரு ஜந்து." ***

"மகத்தான காமம், காதலாகிறது. மகத்தான கோபம் யுத்தமாகிறது. மகத்தான சம்பத்து ஏகாதிபத்தியமாகிறது. மகத்தான பித்தலாட்டம் வியாபாரமாகிறது. மகத்தான சூழ்ச்சி ராஜதந்திரமாகிறது. மகத்தான ஆடம்பரம் கௌரவமாகிறது. மகத்தான துவேஷம் தேசபக்தியாகிறது. மகத்தான சண்டித்தனம் அஹிம்சையாகிறது. மகத்தான பொய்த்தனம் நகைச்சுவையாகிறது. மகத்தான பொய் கலையாகிறது. அப்போது, மகத்தான சகலமும் தியாகமாகாதா, என்ன? ***

"மனிதனுக்குள்ள உணர்வுகள் அனைத்துள்ளும் தற்காப்பு உணர்வும், இனவிருத்தி உணர்வும்தான்; மிக்க ஆழமானவை. மகாபலம் பொருந்தியவை. ***

"எந்த விஷயத்துக்கும் இரண்டு கட்சி உண்டு; இரண்டு வாதம் உண்டு. இரண்டுக்கும் இடையே இருக்கும் எதிர்ப்பிலிருந்து தர்க்கம் கிளம்புகிறது. தர்க்கத்திலிருந்து ஒரு முடிவு ஏற்படுகிறது. அந்த முடிவைப் பற்றி மீண்டும் இரண்டு விதமான அபிப்பிராயம் கிளம்புகிறது. அப்புறம் அதைப்பற்றி ஒரு தர்க்கம். எப்படி, சந்தேகத்துக்கு இடமில்லாமல், மறுக்கமுடியாத உண்மையான ஒரு முடிவு கிட்டும் வரையில்; சந்தேகமும், தர்க்கமும், தற்காலிகமான முடிவும் பின்னிக் கொண்டே செல்கின்றன." ***

"தெளிவாய்த் தெரியாத ஒரு விஷயத்தைப் பற்றித்தான் அது அதுவோ, இதுவோ என்ற ஐயம் நமக்கு உண்டாகிறது. அந்த விஷயத்தை அறிந்து கொண்டுதான் ஆக வேண்டும் என்ற கட்டாயம் ஏற்படுகிறபோது, அதைப் பற்றிய உண்மையை அறிய முயலுகிறோம். நம்முடைய முயற்சி தீவிரமாகி, வெற்றிபெற அந்த விஷயத்தின் உண்மையைப் பற்றிய நமது அறிவு பெருகி விரிவடைகிறது. ***

"மனித சக்திக்கு வரம்புண்டு. எல்லாருக்கும், எல்லாக் காரியமும், எல்லாச் சமயத்திலும், ஒரே மாதிரி நடந்து வராது. பழக்கம் வேண்டும். பயிற்சி வேண்டும்; பொறுமை வேண்டும்; உழைப்பு வேண்டும்; பலம் வேண்டும்; நம்பிக்கை வேண்டும்; கூரான புத்தி வேண்டும்; தன்னையும் பிறரையும் தப்பாமல் எடை போடத் தெரிய வேண்டும். ***

"மனிதன் இயற்கையோடு போராடிப் போராடி முன்னேறி வருவதோடு தன் வாழ்க்கையோடு சதா இணைந்து ஒன்றாகிவிடும் பேய்க் குறைகளுடன் அவன் போராடித் தீர்க்க வேண்டியிருக்கிறது. மனிதப் போராட்டத்தின் தளகர்த்தன் அறிவு; போராட்டத்தின் நோக்கமாக ஏற்படும் லட்சியத்தைச் சாதிக்கும் போர்வீரன் உணர்ச்சி; உணர்ச்சியும் அறிவும் கைகோர்த்து வழிநடத்தாவிடில் வாழ்க்கைப் பிரயாணம் குழம்பிப்போன கனவேயாகும். இறுதியில் அடைவது தோல்வி மட்டும்தான். ***

'ஒரே சமயத்தில் எல்லோரும் இன்புற்றிருக்க முடிவதில்லை; துன்பம் நிறைந்த வாழ்வில், துன்பத்தைப் [redacted] பகிர்ந்து கொள்ளவாவது ஒன்றுபடுவதில்லை; இன்பம் பெறுவதற்குமட்டும் போட்டி போடுகிறோம். ***

(165ம் பக்கம் பார்க்க)